என்றும் இரண்டுவகையிலும் பணம் கொடுக்காமல் இருப்பதற்கு வழி செய்கிறார்கள். ஆகையால் சட்டத்தைத் திருத்தி அறை குறையாக இருந்தாலும் அவற்றிற்கு பணம் கொடுக்க சரியான உத்தரவு போடப்படுமா ?

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** இப்போது சரியான உத்தரவுகள் தான் இருக்கின்றன. முடிந்த வீடுகளுக்குக் கடன் கொடுப்பதில்லை. கூட்டுறவு வீடுகட்டும் சங்கங்கள் அவற்றிற்குக் கொடுக்கமுடியாது. கட்டாமல் இருந்தால் கட்டவேண்டிய ஸ்டேஜ் பிரகாரம் பார்த்துப் பணம் கொடுக்கப்படும். அதனால் விதிகளை மாற்றுவது என்பது அவசியமாகத் தெரியவில்லை.

*Construction of Houses at Allinagaram by the State Housing Board*

* 125 *Q.*—Sri N. R. THIAGARAJAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to construct houses by the State Housing Board at Allinagaram, Madurai district; and

(*b*) if so, the stage at which the matter now stands?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) Yes.

(*b*) The matter is under correspondence with the Special Officer, Allinagaram Municipality, about the source of financing the Scheme and the agency to execute and maintain it.

**திரு. என். ஆர். தியாகராஜன் :** அங்கே இடம் வேண்டுமென்று கேட்டபோது, முனிசிபல் இடமாக இருந்த இரண்டு ஏக்கரைக் கொடுப்பதாக நாங்கள் வாக்குறுதி கொடுத்திருக்கிறோம். சர்க்கார் பண உதவி செய்து வீடு கட்ட ஏற்பாடு செய்வார்களா ?

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** பணம் எந்த சோர்சிலிருந்து வாங்குவது, வீடுகள் எந்த அத்தாரிடி கட்டுவது என்பதெல்லாம் இப்போது கடிதப் போக்குவரத்தில் இருந்து கொண்டிருக்கிறது.

*Soil Conservation Centres*

* 126 *Q.*—Sri M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Soil Conservation Centres established in the State; and

(*b*) the area covered in Kanyakumari and Tirunelveli Districts under the scheme?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Seventeen Soil Conservation Centres (Sub-divisions) have been established in this State. In addition to this, a section is also functioning in Kanyakumari district from 1964–65 onwards to execute Soil Conservation Works.

[12th August 1965

(*b*) The area covered with Soil Conservation measures upto April 1965, in Tirunelveli and Kanyakumari districts is 15,611.12 and 127.05 acres respectively.

*(அ) இம் மாநிலத்தில் பதினேழு மண்வளப் பாதுகாப்பு நிலையங்கள் (சப்-டிவிஷன்கள்) ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவை தவிர, மண்வளப் பாதுகாப்பு வேலைகளை நிறைவேற்ற 1964-65 முதல் கன்னியாகுமரி மாவட்டத்தில் ஒரு பிரிவு செயல்பட்டு வருகிறது.*

*(இ) 1965 ஏப்ரல் முடிய திருநெல்வேலி மாவட்டத்தில் 15,611·12 ஏக்கர்களும், கன்னியாகுமரி மாவட்டத்தில் 127.05 ஏக்கர்களும் மண்வளப் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ்க் கொண்டு வரப்பட்டுள்ளன.*

***திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :*** *தலைவர் அவர்களே, இந்த மண்வளப் பாதுகாப்பு திட்டப்படி நிலத்தில் பாதுகாக்கும் வேலைகளை காண்ட்ராக்ட் மூலமாகச் செய்கிறார்களா, நேரடியாக அரசாங்கமே ஏற்றுச் செய்கிறதா ?*

***கனம் திரு. பி. கக்கன் :*** *விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கப்படுகிறது. கடன் கொடுத்தபிறகு வேலையைக் கண்காணித்தும் வருகிறோம். அதிகாரிகளுடைய ஆலோசனையின்படி விவசாயிகள் வேலை செய்யவேண்டும். அப்படி செய்ய வசதியில்லாத சமயத்தில் காண்ட்ராக்டர்கள் அந்த வேலையை மேற்கொள்ள விடுகிறோம்.*

***திரு. வி. கே. ராமசாமி முதலியார் :*** *மண்வளப்பாதுகாப்புத் திட்டம் எல்லாம் மாவட்டங்களிலும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறதா ? அப்படியானால் இதுவரையில் எத்தனை ஆயிரம் ஏக்கர்கள் இதில் பூர்த்தியாகியிருக்கிறது ?*

***கனம் திரு. பி. கக்கன் :*** *மொத்தம் 3,17,204 ஏக்கருக்கு ஏற்பட்டிருக்கிறது. 1961-62-ல் 78,380 ஏக்கர், 1962-63-ல் 32,900 ஏக்கா, 1963-64-ல் 48,900 ஏக்கா, 1964-65-ல் 68,885 ஏக்கர், 1965-66-ல் கிட்டத்தட்ட 89,507 ஏக்கர்.*

## *Adulteration of turmeric*

* 127 Q.—SRI S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Public Health be pleased to state—

(*a*) whether any prosecution has been launched for the adulteration of turmeric during 1964–65; and

(*b*) if so, the number of such cases?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (*a*) Yes.

(*b*) 95 Cases.

SRI S. K. SAMBANDHAN : Sir, what is the nature of adulteration of these cases?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : Chloromite lead.